[24th April 1962

*Bus Transport (Nationalization)*

***3 Q.—Sri M. KARUNANITHI :** கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

பஸ் போக்குவரத்து தொழிலை தேசியமயமாக்க திட்டம் உண்டா?

**The Hon. Sri R. VENKATARAMAN :** There is no change in the Government's policy of progressive nationalization of road transport. Specific decisions will be taken by Government from time to time.

**Sri M. KARUNANITHI :** பஸ்களை தேசியமயமாக்குவதற்கு தமிழக அரசாங்கம் தீவிரம் காட்டாததற்குக் காரணம் என்ன?

**The Hon. Sri R. VENKATARAMAN :** அந்தக் கொள்கையில் தீவிரம் காட்டி வருகிறது என்பதுதான் எங்களுடைய கருத்து.

**Sri M. KALYANASUNDARAM :** படிப்படியாக பஸ்களை தேசியமயமாக்குவது என்பது அரசாங்கத்தினுடைய கொள்கை என்று கனம் அமைச்சர் அவர்கள் அறிவித்தார். அந்தக் கொள்கையின் விவரம் என்ன?

**The Hon. Sri R. VENKATARAMAN :** இப்பொழுது 120 மைல்களுக்கு அதிகமாக ஓடுகின்ற எல்லா ரூட்டுகளையும் சர்க்காரே எடுத்துக்கொள்வது என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அந்த முடிவுப்படி 120 மைல்களுக்கு அதிகமாக இருக்கக்கூடிய ரூட்டுகளையெல்லாம் சர்க்கார் எடுத்துக்கொள்வது என்று முடிவு எடுக்கப்பட்டு விட்டது. இனிமேல் அந்த முடிவுப்படி 120 மைலுக்கு அதிகமாக இருக்கக்கூடிய ரூட்டுகளையெல்லாம் தனியார் துறைக்குக் கொடுக்கப்பட மாட்டாது. அந்த அடிப்படையில் ஏழு ரூட்டுகள் எடுத்துக்கொள்ளப்பட்டு நடந்து கொண்டிருக்கின்றன. இந்த ஆண்டு மேற்கொண்டு ஐந்து ரூட்டுகள் விஸ்தரிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இன்னும் நான்கு ரூட்டுகளுக்கு முடிவு எடுக்க வேண்டும் என்று பரிசிலனை நடந்து கொண்டிருக்கின்றன.

**Sri M. KALYANASUNDARAM :** 120 மைலுக்கு அதிகமாக இருக்கக்கூடிய ரூட்டுகளை அரசாங்கமே எடுத்துக்கொண்டு நடத்துவது என்பது ஏற்கெனவே இருக்கக்கூடிய ரூட்டுகளா அல்லது புதியதாக ஆரம்பிக்கப்போகும் ரூட்டுகளா? இனிமேல் ஆரம்பிக்கப்போகும் ரூட்டுகள் தனியார் துறைக்குக் கொடுக்கப்படுமா?

**The Hon. Sri R. VENKATARAMAN :** தனியார் துறையில் இனிமேல் யாருக்கும் 120 மைலுக்கு மேல் ரூட்டுகள் இல்லை.

**Sri M. KALYANASUNDARAM :** இப்பொழுது கனம் அமைச்சர் அவர்கள் சொன்ன பதிலிலிருந்து அரசாங்கம் ஏற்றுக் கொண்டிருக்கிற தேசியமயமாக்கும் கொள்கைப்படிக்கும் எடுத்துக் கொண்டிருக்கிற நடவடிக்கையின்படிக்கும் எந்த விதத்திலும் தனியார் பாதிக்கப்பட மாட்டார்கள் என்பது உண்மையா?

24th April 1962]

THE HON. SRI R. VENKATARAMAN : இதன் மூலம் தனியார் துறை பாதிக்கப்படும் என்று நினைத்தால் அது உயர்ந்த லட்சியம் அல்ல. அது நல்ல லட்சியம் என்று சொல்ல முடியாது. ஆனால் இனி 120 மைலுக்கு மேல் இருக்கக்கூடிய ரூட்டுகளைக் கொடுக்கப் போவது இல்லை. அந்த முடிவு ஒரு சிறந்த முடிவுதான். இதுவே ஒரு சிறந்த முடிவுதான்.

SRI V. S. S. MANI : ஜீப் பஸ்கள் ஓடக்கூடிய ரூட்டுகளும் எடுத்துக்கொள்ளப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஜீப் பஸ்கள் ஓடக்கூடிய ரூட்டுகளை எடுத்துக்கொள்ளும் உத்தேசம் இல்லை. இப்பொழுதுள்ள திட்டப்படி 120 மைலுக்கு மேல் உள்ள ரூட்டுகளை எடுத்துக்கொள்வதாக உத்தேசம். அதுவே இன்னும் முடிவு அடையவில்லை. அதனால் கனம் அங்கத்தினர் சொன்னதைப்பற்றி இப்பொழுது யோசனை பண்ணுவதற்கு இல்லை. இதன் பிறகுதான் அவர் சொன்னதைப்பற்றி யோசிக்கலாம்.

SRI V. KRISHNAMOORTHY : கனம் சபாநாயகர் அவர்களே, ஆளும் கட்சிக்கு பலம் குறைந்துவிடும் என்ற காரணத்தால் பஸ்களை உடனடியாக சர்க்கார் தேசியமயமாக்கவில்லை என்பது வாஸ்தவம் தானா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஆளும் கட்சியின் பலத்தைக் குறைக்க வேண்டும் என்கிற காரணத்திற்காக எதிர்க் கட்சிக்காரர்கள் பஸ்களை தேசியமயமாக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள் என்பதில் உண்மையிருந்தால் இதிலும் உண்மை இருக்கிறது என்பதை ஏற்றுக்கொள்ளலாம் (ஆரவாரம்).

SRI A. P. DHARMALINGAM : அப்படியென்றால் அரசாங்கம் பஸ் முதலாளிகளுக்கு பலம் காட்டுகிறார்கள் என்பது உண்மை தானா ?

(பதில் இல்லை.)

MR. SPEAKER : Questions are over.

[*Note:*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## III.—ANNOUNCEMENTS.

### (1) NOMINATION TO THE PANEL OF CHAIRMEN.

MR. SPEAKER : தமிழ்நாடு சட்டசபை விதிகளின் 14-வது விதியின் 1-வது உட்பிரிவின்கீழ் பின்வரும் ஆறு சட்டசபை அங்கத்தினர்களை இச் சபையின் முதல் கூட்டத் தொடரின்